# CHELLAM TALKIES



## PRESENTS



# DUMBACHARI or IDEAL WIFE

THE

## FIRST SOCIAL TAMIL TALKIE

## PIONEER'S MAGNIFICENT PRODUCTION





# டம்பாச்சாரி
OR
# "உத்தம மனைவி"

கதா பாத்திரங்கள்.

தென்னிந்திய நாடக சங்கீத ரமணி ஆர்மோனியச் சக்ரவர்த்தினி
கோகிலகான

**மிஸ். P. S. ரத்னபாய்—குணபூஷணி.**

சபாலங்கிருத சங்கீத திலகம்

**மிஸ். P. S. சரஸ்வதிபாய்-மதனசுந்தரி.**

இந்தியன் சார்லி

**மிஸ்டர். C. S. சாமண்ணா—**
நிகரற்ற 7 வேடங்களில் தோன்றுவார்.

மஹாராஜபுரம் சங்கீத வித்வான் ஸ்ரீமான் விஸ்வநாதய்யரின்
சகோதரர் மஹாராஜபுரம்

**மிஸ்டர். M. R. கிருஷ்ணமூர்த்தி—**
**டம்பாச்சாரி.**

விசித்ர விகட ஹாஸ்ய பூஷணங்கள்

**M. S. ராகவம், M. S. முருகேசம்—**
விதூஷகர்கள்.

சினிமா திலகம்

**மிஸ். ராகினிதேவி—நடனம்.**

சென்னை, Mr. ரங்கசாமி நாயகர்—ஆர்மோனியம்.

கிராமபோன் புகழ்

எராணுதளம், Mr. K. V. நாயுடு—தபேலா.

டைரக்டர்:
Mr. M. L. டாண்டன்
(of HOLLYWOOD)



## "டம்பாச்சாரி கதாஸாரம்."

சென்னைச் சிந்தாதிரிப்பேட்டையில் குபேர ஸம்பத்துடைய தனபாலன் ஓர் ஆண் மகவை ஈன்றெடுத்து மகிழ்தல். பின்னர் அக்குழந்தையின் ஜாதகத்தை ஜோஸியர்களைக் கொண்டு ஆராய்ச்சி செய்ய, இஜ்ஜாதகன் பெரும் பொருளை அழிக்க நேரிடும் எனக் கேட்ட தனபாலன் தனது ஸம்பத்தின் பெரும் பாகத்தை ஓர் பழைய வீட்டில் புதைத்து வைத்தல். தனபாலன் தனது மகனுக்கு குணபூஷணியை மணம் செய்து வைத்தல். மரண சமயம் நேர்ந்த தனபாலன் "மானம் போக உயிர் வைத்துக்கொள்ளாதே; புராதன வீட்டைக் கைவிடாதே" என்று கூறி, தேகவியோகம் அடைதல்.

குணபூஷணியோடு டம்பாச்சாரி வாழ் நாளில், குணபூஷணி கர்ப்பவதியாகித் தாய்கம் செல்லல். பின்னர், கூடா ஒழுக்கம் உடையவர்கள் சேர்க்கையால் டம்பாச்சாரி மதுபானம், விலைமாதர் சேர்க்கை, சூதாட்டம் முதலான துன்மார்க்கத்தில் ஈடுபட்டு பொருளை அழித்தல்.

ஓர் தினம், நண்பர்களோடு டம்பாச்சாரி ஏகாம்பரீஸ்வரர் ஆலயம் செல்ல அங்கு மதனசுந்தரி வரவே, ஒருவருக்கொருவர் பார்த்துக் கொள்ளுங்கால் டம்பாச்சாரிக்கு துர்நிமித்தமும், மதனசுந்தரிக்கு நந்நிமித்தமும் காணுதல்.

டம்பாச்சாரியைக் கண்டுபோன மதன சுந்தரி தன் தாயைக் கண்டு கும்பகோணத்து அப்பரை அழைத்து வந்து டம்பாச்சாரியைக் கொண்டுவரச்செய்து நேசித்தல். சட்டுவாஜியின் மூலமாய் டம்பாச்சாரியினது கூடா ஒழுக்கத்தை அறிந்த குணபூஷணி டம்பாச்சாரியைக் கூடா ஒழுக்கம் கூடாதெனத் தடுத்தல். மதனசுந்தரியோ டம்பாச்சாரியை நட்புற்றுத் தன்னைப் பிரியாத உறுதிமொழி பெற்றுப் பின்னர் தாயார் தாண்ட இடும்மருந்தை அருந்தச்செய்து பெருமிதமான



நகைகளும், வசதியான பங்களாவும் அடைந்து அந்த பங்களாவிற்குரிய சாமான்களையும் விரும்ப, டம்பாச்சாரி தனது வீட்டுச்சாமான்கள் யாவையும் கொண்டுவரச் செய்தல். அதனைக்கண்ட குணபூஷணி நோதல்.

அதன்பின், டம்பாச்சாரி தன் வீடு சென்று குணபூஷணியிடம் உணவுகேட்க இல்லாதவகையைத் தெரிவிக்க, டம்பாச்சாரி கோபித்து குணபூஷணியைக் குழந்தையோடும் வெளியில் துரத்தத் தாயகம் செல்லவே, தாயார் நிகழ்ச்சியை அறிந்து ஆதரித்தல். குணபூஷணியின் தமையன் சினமடைந்து டம்பாச்சாரியைத் தூற்றுதல்.

மதனசுந்தரி நகைகள் கொள்ளை போயினதென நிரூபம் காட்டி, மீளவும் நூதன நகையைப் பெறுதல். பின்னும் செலவுக்கான பணம் கேட்க டம்பாச்சாரி கடன் வாங்கியும் அளித்தல். கடனுற்ற டம்பாச்சாரியின்மீது கடன் கொடுத்தவர் கேட்கவர, சிலரை அடித்தும், சிலரைத் தந்திரத்தாலும் திருப்பி அனுப்புதல். கடன் கொடுத்தவர்கள் கோர்ட்டில் நடவடிக்கை தொடுத்து வாரண்டுடன் வந்து நாசிக்கு லஞ்சம் அளித்து டம்பாச்சாரியை வெளிவரச்செய்து சிறைப்படுத்துதல்.

நீதிஸ்தலமடைந்த டம்பாச்சாரி குணபூஷணி உதவியால் விடுபட்டுப் பின்னரும் தாசிவீடேக, அவள் வெறுக்க, தன் மனைவந்து தனக்குற்ற நிலையை யோசித்தவனாய்க் குணபூஷணியையும் குழந்தையையும் அழைத்து வந்து அவளிடம் மன்னிப்பு பெறுகிறான். குலவிளக்கான குணபூஷணி கணவனுக்குத் தேறுதல் சொல்லல். ஒரு நாள் தன் நிலையை யோசித்து டம்பாச்சாரி நடு நிசியில் தற்கொலை புரிந்துக் கொள்ள செல்லவே அங்குற்ற நற்சந்தர்ப்பத்தால் புதைநிதி கண்ணிற்பட, அதை எடுத்து கடனெல்லாம் தீர்த்து கவலை தீர்ந்திருக்குங்கால் மதனசுந்தரி வர, டம்பாச்சாரி வெறுக்க, உத்தமியாம் குணபூஷணி அன்போடு உபசரித்து சில தனம் கொடுத்தனுப்புதல். பின்னர் குணபூஷணியோடும், குழந்தைகளோடும் டம்பாச்சாரி மங்களமாய் இல்லறத்தில் வாழ்ந்துகொண்டிருத்தல்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

---



# டம்பாச்சாரி

அல்லது

## உத்தம மனைவி

குணபூஷணி.

இராகம்—பைரவி.] [தாளம்—ஆதி.

பல்லவி.

1. வேலவரே உமைத்தேடி ஒரு மடந்தை
விடியு முழுதுங் காத்திருக்கிற வகையென்ன (வே)

அநுபல்லவி.

வாலிபமும் சேல்விழியும் வில்லுநற் புருவம்
வடிவும் நூலிடையும் மதிவதனமும்
மேலுமவள் மேனி பசும் பொன்னிறமும்
மின்னற் கொடியாள் அன்னநடையாள் ஒய்யலாகவே (வே)

சரணம்.

வித விதமான பச்சிளங் கொங்கை மீதிலே
வேணபடி அலங்கரித்த பல் வரிசையும்
கதலித்தொடையும் அதரக்கனி சொறுக்கழகும்
கருத்தை யுருக்கும் கல கலவென நடையும் (வே)

டம்பாச்சாரி.

இராகம்—இந்து-பாகேச்வரி.] [தாளம்—சதுச்ர ஏகம்.

2. அநுதாபமாகுதேமானே
யானென் செய்வேனோ ஆருயிரே (அநு)
உந்தன் பிரிவினாலே ஓர் நொடியோர்யுகமாய்
சிந்தை மெலிந்தே பாவாய் செல்லுதே நோய் விஞ்சிப்
இனி உனை நானோ நேரிலே காண (அநு)

டம்பாச்சாரி.

இராகம்—இந்து-சாரங்.] [தாளம்—திச்ர ஏகம்.

பல்லவி.

3. பரமானந்தமே பாரில் தாஸிமாதரின்
அநுபவம் பரம போகமே (பரம)



அனுபல்லவி.

பஞ்சணையே சொர்க்கம் கொஞ்சுதலே வேதம்
வஞ்சி யிதழ் அமுதினும் சிலாக்யமே
சார்வதே வைராக்யமே (பாம)

சரணம்.

தாசிகள் நேசமில்லாதவரிந்தத்
தாரணி தன்னில் வீண் ஜென்மமே
மாசில்லாத விலைமாதர்க்களிப்பதே புண்யமே
காசினி தன்னிலே செல்வம் படைத்ததென்ன
காரியம் மாதரின் போகமே—சார்வதே
வை போகமே (பாம)

மதனசுந்தரி.

"சரவணபவா" என்ற மெட்டு.

இராகம்—கல்யாணி.] [தாளம்—ஆதி.

பல்லவி.

4. உனதருளல்லால் உலகியலுமோ (உன)

அனுபல்லவி.

தினமுமடியார் குறையகலவே
சென்னை வாழும் ஏகாம்பர சிவனே பரனே (உன)

சரணம்.

எதுவும் நின் செயலென வெண்ணிடவே
எனதுள்ளத்திலே இருந்தருளுவாய்
அதுவுமன்றியே அலர் மணமதாய்
அங்கு மிங்கு மெங்கும் அமர்ந்த பொருளே (உன)

மதனசுந்தரி.

இராகம்—செஞ்சுருட்டி.] [தாளம்—திச்ர ஏகம்.

5. மைடியர் மாமா வரவேணுமே—போர்
மன்னாய்த் தங்களை எங்கே காணோமே ஹல்லோ (மை)
நானிருப்பதாயுமக்கு ஞாபகத்திலேது—அது
ஞாபகத்திலே யிருந்தால் வருவதுந்தப்பாது
எனுமக்கென் வீட்டிலே இருக்க மனம் வாரதோ
எதுவும் உமது மனதின்படியிங்கே நடந்திடாதோ (மை)



ஊரில் வந்தழைத்தபின்பு நேரில் வந்த மாமா—இந்த
ஊரிலே பிடித்தமில்லையோ சொல்லுங்கள் மாமா
சேரிலே உட்காரும் சிலது சேதி சொல்லுவேன் மாமா
சிரமந்தீர சாய்ந்துக்கொள்ளும் சேஷமந்தானே
மாமா (மை)

மதனசுந்தரி.

"கோடையிடிக்குதம்மா" என்ற மெட்டு.

இராகம்—செஞ்சுருட்டி.] [தாளம்—சதுச்ர ஏகம்.

6. மாயவரம் சண்பகம் மன்னார்குடி கற்பகம்
மங்களூர் வாழ் மரகதம்
இவர் குடும்பமே எப்படி நலமே—மாமா
மதித்துச் சொல்லும் விவரமே.

மதனசுந்தரி.

"ஆ—தில்கிராஜன்" என்ற மெட்டு.

[தாளம்—சதுச்ர ஏகம்.

7. பல்லவி பாடும் மோகனாங்கி அவள்
பரமக்குடியில் சுகமா மாமா (பல்)
வல்லவள் வீணை பட்டு ராஜம்—அவள்
வாழ்க்கை யெப்படி சொல்லும் மாமா
கோமளம் குண நீலவேணி—புதுக்
கோட்டையிலே சுகமா மாமா (பல்)

மதனசுந்தரி.

"திட்டக்கிட்ட வந்து" என்ற மெட்டு.

[தாளம்—திச்ர ஏகம்.

8. கிவளூர் ஜாவளி பாடும் கிருஷ்ணவேணி
சுகமா சுகமா சுகமா (கிவ)
நாவலூர் ரஞ்சித மோகினி சுகமா
நாட்டரசங்கோட்டை பாக்கியம் சுகமா
மூவலூர் பரத முத்தம்மாள் சுகமா
முட்டுக்காரன் மகள் மோகனக் குஞ்சரி
சுகமா சுகமா சுகமா (கிவ)



டம்பாச்சாரி.

இராகம்—சுருட்டி.] [தாளம்—ஆதி.

பல்லவி.

9. மனோசுக்ருத மாமா நீரெனது (மனோ)

அனுபல்லவி.

தனுதிபதிகளையே நேசமொடு
சல்லாபமுடனே உறவு கொள்ளும் (மனோ)

சரணம்.

விலைமாதர்க்கெல்லாம்—நீர் அரிய
குல தெய்வமன்றோ
விலாஸ மதியூகா—நீரு மென்னை
வேண்டிவந்ததே எனது தவம் (மனோ)

மாமா.

இராகம்—ஆனந்த பைரவி.] [தாளம்—சாப்பு.

10. மதனசுந்தரி உமது மாயவலையிற் சிக்கி
மயங்கியே மிக வாடினாள்
சுதினமாகிய அன்று ஆலயந் தனிற் கண்டு
சோகம் மிக அடைந்து துயரமடைந்தாளின்று (மத)

குணபூஷணி.

"ஆட்டோப்யாரி" என்ற மெட்டு.

[தாளம்—சது—ஏகம்.

பல்லவி.

11. நாதா கேளும் நலமிதுதானே
நான் சொல்வதோ—ஞாயம் நான் சொல்வதோ (நாதா)

அனுபல்லவி.

தீது செய்வோர்கள் சேர்க்கையினாலே
தீமைகள் வருமே நிஜமவராலே
யாதோ பலன்—அவரால் ஏதோ நலன்
வேண்டாம் (நாதா)

தொகையறா

அறிவினால் மிக்க நீர் அறிவிலார் நேசமே
அடைதலேனோ



பிறகிதால் இடர்களே பெற நேரு மறிகுவீர்
பிறகு தானே

பாட்டு.

வேண்டாம் நாதா விலகிடும் நீரே-வீணாகுமே
உமது மாண் போகுமே (நாதா)

டம்பாச்சாரி.

இராகம்—தேசிக தோடி.] [தாளம்—சது-ஏகம்.

12. வீணைப் பேசாதே கொடியாய்-இனி உனை
மிகச் சினந்திடுவேன் அடாதுனக் கிதே (வீணு)
ஆணைப் பிறந்தவர் காரியங்களிலே
அறிவையர் தலையிடல் அறிவிலாச் செயலே
அறிகுவாய் நீயே (வீணு)
சதுனக் குரைத்தேன் இது முதலாக
வாதுகள் பேசிடில் வருமிடராக
மாதே கேள்
மறுத்திடவேண்டாம் (வீணு)

குணபூஷணி

"ஜின் நெதியாலதில் குதில்" என்ற மெட்டு.

[தாளம்—திச்ர நடை.

13. நாதனையாள் தயாபரீ—உனை
நான் மறவேன் க்ருபாகரி (நாத)
தீதுறுமார்க்கம் செல்லாமலே
தீயவரோ டிணங்காமலே என் (நாத)
பேதையுனை நம்பினேனம்மா
பெண்ணல்லவோ யிரங்காயம்மா
ஆதரவாய்க் கண் பாரம்மா
அன்னை யுனையன்றி யாரம்மா (நாத)
வஞ்சி யெனக்கு நீயே கதி
வந்தருள்வாய் இதே கதி
ரஞ்சித மோகன ரூபிணி
ராஜராஜேச்வரி சத்குணி என் (நாத)

மதனசுந்தரி.

"ஜாரசோர" என்ற மெட்டு.

[தாளம்—தேசாதி.

14. வாருமன்று சுகுண நான் மனமகிழ்ந்தேன் (வாரு)
நேரிலும்மைக் கண்டிடவே
நெடுநாள் காத்திருந்தேன்—நான்



நாடிவந்த தினமீதே—நல்ல சுதினம்
நான்புரிந்த நற்றவமே
நலமா யமர்ந்திடுவீர் (வாரு)

மதனசுந்தரி.

"ஜீவ சிந்தாமணியே" என்ற மெட்டு.

[தாளம்—சதுச்ர நடை.

15. காமி உமை நான் ஆலயந்தனிலே
கண்டேனல்லவா உமைக்
கண்டது முதலா யென் விரகம்-கண்
ணாளா சொல்லவா (காமி)
உமதுருவமே மனதில் நினைந்தேன்-உம
தடைக்கலமாக அடைந்தேன்-என
துடல் பொருளா வியிழந்தேன்-மன
தேங்காமலேங்கினனே நானே
கேளும் மன்னவா (காமி)

தொகையறு.

மனமுவந்து உமையடைந்த தெனது
பாக்யந்தானே
கனிவு தந்து மருவிடத் ததியமைந்த
தினமிதானே

பாட்டு.

மதி சுகுண தந்த்ர விலாசா-மன
மகிழ் வொடுவந்த என் நேசா அதி
மதன சுந்தரப்ரகாசா—என்
ஆவிக்குரிய நே சாதமியேன் ஆசை ப்ராணேசா (காமி)

மதனசுந்தரி.

"ஒரு நாளும் மறவேனே" என்ற மெட்டு.

[தாளம்—தேசாதி.

பல்லவி.

16. மகிழ்வானேன் மணவாளா கனவானே (மகிழ்)

அனுபல்லவி.

அகமும் புறமும் ஒன்றாய் இசையுமானலதுவே
அலது மணமு மல்லவோ (மகிழ்)
எண்ணி எண்ணியிருந்த என்ன மீடேற நானே
புண்ணியம் செய்தேனல்லவோ (மகிழ்)



டம்பாச்சாரி.

"ஒரு நாளும் மறவேனே" என்ற மெட்டு.

பல்லவி.

17. நல்ல நேரம் குணசாலி இதுதானே (நல்ல)

அனுபல்லவி.

வல்ல மதனனிதோ வாளி தொடுப்பதாலே
தொல்லை தவிர்ப்பாயினி மேலே (நல்ல)
காலம் வந்தா லெதுவும் கைகூடுமே சுந்தரி
காமினியே எந்தன் நாயகி (நல்ல)

மதனசுந்தரி

"யாரகிகலியா" என்ற மெட்டு.

[தாளம்—தேசாதி.

18. மன்னவா நீர் என்னையாளும்
மதன ராஜதுரையே கேளும் (மன்)
சென்னை வாழும் சுகுணன் நீரே
சிறந்த கனவான் வேறு யாரே (மன்)

குணபூஷணி.

"ராதெப்யாரீ" என்ற மெட்டு.

[தாளம்—சது-எகம்.

19. என்னுயிராளா இன்ப மணாளா
இனியகுணாளா எழுந்திருமே
மன்னவனீரே மதனனுநீரே
மதுவுண்டீரே எழுந்திருமே (என்)
உலக விரோதம் உமக்கபவாதம்
இலகுமநீதம் வனிதுவே
நன்னடை பெறவே நான் மகிழ்ந்திடவே
இன்னல கலவே எழுந்திருமே (என்)
குவலய மாரா கொடையிலுதாரா
குலவர தீரா எழுந்திருமே
நவமணி பூஷா நவரஸ பாஷா
ரஞ்சித வேஷா எழுந்திருமே (என்)



### மதனசுந்தரி.

"பாயல மோரீபா" என்ற மெட்டு.

[தாளம்—ஆதி.

**பல்லவி.**

20. மார உதாரசிகா மணியே

**அனுபல்லவி.**

மகிழ்வாகவே மாது நான் விரும்பும்
சீர்மிகும் பங்களா சீக்கிரம் அமைப்பீர் (மா)

**சரணம்.**

உன்னத சந்தனம் தேக்குமரங்களால்
உயர்தரமாகிய உப்பரிகை யுடனே
மன்னியே நாமிருவரு மிருந்திடவே
மாடமாளிகை நந்தவனத்துடன் விளங்கவே (மா)

### குணபூஷணி.

இராகம்—சாவேரி.] [தாளம்—சது திரிபுடை.

**பல்லவி.**

21. மனம் போனபடியே நடந்திடில் யார்தான்
மறுக்கக்கூடும் ஐயா சட்டுவாஜியே (மனம்)

**அனுபல்லவி.**

தினமும் விலைமாதரைச் சேர்ந்திடும் லோலரென்று
சென்னையிற் பெயரெடுத்தவரினி மேலே
திருந்திவரும் சமயம் வருமே பின்னாலே
முன்னைவினையை நாம் முயற்சிப்பதாலே
முறிக்க ஒண்ணுமோ அவள் மோகத்தினாலே (மனம்)

**சரணம்.**

வீட்டிலுள்ளதை யெல்லாம் வேசிக்கே கொடுக்கட்டும்
வேசி வீடே கதியாய் மேவியே இருக்கட்டும்
தாட்டீகரெனை மறந்தாலுமே மறக்கட்டும்
சகுணனவரை மறவாதெந்தன் மனமட்டும்
தையலெனக்குத் துணை தெய்வம் நிச்சயமே
தஞ்சமென்றவரை விடாதிலை பயமே
வெய்ய வினையிதுவே வேறு சம்சயமே
வேண்டாம் எதுவும் ஆண்டவன் அருள் மயமே (மனம்)



### குணபூஷணி.

**விருத்தம்.**

22. மண்ணுலகதனில் வாழும் மானிடர் பலரில் இந்தப்
பெண்ணெனும் ஜென்மமாகப் பிறப்பித்தான் பிரமனந்தோ
நண்ணறும் இன்ப வாழ்க்கை நானடைந்தவளானாலும்
எண்ணறும் துயரத்தாலே என்னுள்ளம் மெலிகின்றேனே.

### குணபூஷணி.

"கார்த்திகேயா கருணைசெய்தாயா" என்ற மெட்டு.

[தாளம்—தேசாதி.

23. அயல் வீடேகியாகிலும் உணவே
அன்புடன் கொண்டேவருவேன் துரையே
தயவாயதனைத் தாங்களும் புசித்தே
தையலாளெனை யாதரிப்பீர் களித்தே

### டம்பாச்சாரி.

"கார்த்திகேயா கருணை செய்தாயா" என்ற மெட்டு.

24. கடுகளவேனும் கவுரவமானம்
காணேமே உன்னிடம் கழறுதல் வீணே
அடியவளிடமே அறைந்திடுமனமே
அரை நொடிதனில் உணவதுவரும் (கடு)

### குணபூஷணி.

இராகம்—பாண்டு.] [தாளம்—திரிபுடை.

**பல்லவி.**

25. அம்மா கேள் எனக்கே நிகழ்ந்தகதி
அறிவாய் அயனார் விதித்த விதி

**அனுபல்லவி.**

விம்மா நான் வெதும்பியே வந்தேனிங்கே
வினைபோலவே யாரும் போவதெங்கே (அம்மா)

**தோகையரு.**

அணிபணிகள் செல்வங்கள் லக்ஷக்கணக்காக
அவள் தனக்களித்துக் கெட்டார்
துணிவுடன் இல்லந்துறந்திடும் படியெனைத்
துரத்தியே போகவிட்டார்



### பாட்டு.

விலைமாதாலே யென் பிராணபதி
வீணுய்ப் போயிஞ ரவள் வீட்டேகதி
நிலையா யெனைப் பெற்ற தாயல்லவோ
நினைத்தே இங்கேவந்தேன் பெண்ணல்லவோ (அம்மா)

### குணபூஷணியின் தாயார்.

"பார்த்திப சிங்காரன்" என்ற மெட்டு.

இராகம்—இந்து-தோடி.] ஏக—தாளம்.

26. என் அருமைக்குரிய மகளே—என
தன்பினுக் குரியாளே—என் (அருமை)
கருவில் வந்த மணியே—உனைக்
காப்பேன் குணபூஷணியே—என் (அருமை)
தயங்கி நீயும் சோற—நான்
சகிப் பே ஞே மன தா ர—உன்
மனதில் துயரம் சேரக்—கண்டு
வருந்தினேனுன் வரவு—நேர (அருமை)

### குணபூஷணியின் தமயன்.

இராகம்—மோகனம்.] [தாளம்—ஆதி.

பல்லவி.

27. எங்கே எங்கே எங்கே அவன்

அனுபல்லவி.

இப்படிச் செய்திட்ட அவன் எப்படிப்பட்டவன்
அவன் (எங்கே)
ஈன நடையான் மைத்துனன்
ஆனலும் பார்க்கிறேன் அவன் (எங்கே)
எதுனை அனுதையாய் ஓர் பேதை
போல் எண்ணினன் அவன் (எங்கே)

சரணம்.

தன் குலப் பெருமையைத்தான் அறந்தானே
தாயனுண்டென்பதைத் தான் மறந்தானே
என் கவுரவந்தனை இகழ்ந்துவிட்டானே
இப்போதே கண்டிக்காவிட்டால்
தப்பிதமாகுமே அவன் (எங்கே)



### குணபூஷணி.

"தீமையானபல" என்ற மெட்டு.

[தாளம்—சதுச்ர நடை.

28. அண்ணு நானொரு விண்ணப்பம் புகல்வேன்
ஆதரித்தருளுவீரே என் (அண்)
பெண்ணுள் எனை மணங்கொண்ட என் கணவர்
பெருமைக்கும் அருமைக்கும் இடர்கள் செய்யாதீர்
பெருத்த குணத்தை வகித்து நடத்துமிதுவே (அண்)
தீமைகள் எனக்கவர் செய்திருந்தாலும்
தினையள வேனும் மனதிலெண்ணுதீர்
தீயகாலம் போக நேருமிதுவே (அண்)

### மதனசுந்தரி.

"ஆப்ரியா" என்ற மெட்டு.

[தாளம்—சது நடை.

29. நானென் செய்வேன் மோசம்போனேன்
நானென் செய்வேனே ஐயையோ (நா)
அணிபணி போச்சே திருடர்கள் எச்சே
அபகரித்திட லாச்சே ஐயையோ (நா)
உயர்தா மான வேலை உடைய நற் தோடு மாலை
வயிர ஒட்டியாணம் சேலை மதிப்பிலாப் பொருளிவ்வேளை (நா)
காதலனளித்தார் காதலி களித்தேன்
பாதகி பறி கொடுத்தேன்—ஐயையோ
நாயகனிடத்தில் நானே உரைக்கில்
சீ யென வெறுக்காரோ ஐயையோ (நா)

### குணபூஷணி.

விருத்தம்.

ராகமாலிகை.

30. வாழ்வையோர் நிலையா யென்ன வகையிலையே யென்றுலோ
வாழ்வொடு தாழ்வும் வந்து மன்னுதல் முன்னேசெய்த
ஊழ்வினையாகுமீசன் ஒருவனல் நேரு மிந்தச்
சூழ்வினை யதனைக் கண்டு சொல்லவும் தரமதாமோ.



குணபூஷணி.

"அகில பாரத தேவி" என்ற மெட்டு.

[தாளம்—ரூபகம்.

31. கணவன் வாரன்டைத் தீரும்
கவலையில்லாது காரும்
கருத்தினில் இதைத் தேரும்—நீரும் (கண)
இணையில்லாக்கடன் வாங்குவதாலே
இப்படி யெல்லாம் வாரதோ மென்மேலே
ஏதோ மெய்யாம் அன்பாலே
இப்பொழுதே நீர் முன்னாலே (கண)
மானம் போகாமலே காத்திடுவீரே
மானமும் போனால் வாராதறி வீரே
ஈனம் அடையாமல் நீரே
எத்தனித்தே முயல் வீரே—நீரே. (கண)

டம்பாச்சாரி.

இராகம்—கமாஸ்.] [தாளம்—ரூபகம்.

பல்லவி.

32. ஆஹா இது மோசத்தில் மோசமன்றோ
ஆனாலும் ஈ தனியாயம் (ஆஹா)

அநுபல்லவி.

ஓ ஹோ இவள் பழிகாரி
உதவின பேர்க் கபகாரி (ஆஹா)

சரணம்.

அளவில தாகிய பொருளும் அணிபணி முதலிய வீடும்
உளமகிழ் வொடு நான் தரவும் ஒருபயனிலையே அணுவும் (ஆஹா)

குணபூஷணி.

இராகம்—இந்து விஜய ஜயந்த்.] [தாளம்—சது-ஏகம்.

33. காசி விஸ்வேசனே கருணை விலாசனே (காசி)
மாசில் விசாலாக்ஷி மாதோர் பங்காளனே (காசி)
கங்கை யணிந்தவா கலைமதி கொண்டவா
கருமங்கள் தீர்ப்பவா கருணை யளிப்பவா



எங்களை நின்னருளால் என்னாளும் ஆள்பவா (காசி)
துன்பங்கள் தீரவே துயரங்கள் போகவே
இன்பம் பெருகவே என்றுமே வாழ்கவே
அன்புடன் வேண்டினேம் ஆதாரம் நீயையா (காசி)

டம்பாச்சாரி.

இராகம்—பியாக்.] [தாளம்—தேசாதி.

34. வேசையினாலே விளைந்த திக்காலே (வே)
வீண்மதி படைத்தேன் வெகுபொருள் அழித்தேன் (வே)
மாசிலாத அருங்குண பூஷணியே (வே)

டம்பாச்சாரி.

"நானே னேவினேன்" என்ற மெட்டு.

35. பாவி நானன்றோ சொன்னேன் முக்காலும் (பாவி)
மனைவி நீ யென்றே மனதில் எண்ணாமல்
இனிவரும் இடருணராமல்—கொடியன்
பிசகைப் பொறுப்பாயினி (பாவி)
குணபூஷணியே குணமுடன் நீயே
கணவனென் பிழை பொறுப்பாயே
கருணையுடனே அழைப்பாயினி (பாவி)

குணபூஷணி.

"மஹா தேவ பர சிவா" என்ற மெட்டு.

பல்லவி.

36. மனோ ரம்ய மதன ராஜசுகுண
மாசிலாத மாக்ஷி ராஜனே எனதரும் (மனோ)

அநுபல்லவி.

மருவிலாத நேமமுடைய தருவே
மனோ விசாரமேன் எனது துரையே (மனோ)



சரணம்.

எதுவுமீசன் அருளினாலே வருமே
எதுக்கிந்த மனசஞ்சலம் விடுமே
ஈனமார்க்கம் அடையவரும் கதியே
இனிமேலிலை சரதமே தனபதியே
இனிய சுகிர்தவரனே ஜயகரனே
எதுவும் சுகமே யாவும் இனிமேல் ஜயமே (மனோ)

### குணபூஷணி.

"துனியாம் பருக்கி" என்ற மெட்டு.

[தாளம்—தேசாதி.

37. சுகுணா மா மதனா—அதி
சுகிர்தனே வரதனே
ஜெகப்ரதாபா ஸரஸ சல்லாபா (சுகுணா)
சிலசம்பன்னா தீரனே மன்னா
திவ்ய ஸ்வரூபனே மதனா
ஜெகப்ரதாபா ஸரஸ் சல்லாபா (சுகுணா)

### மதனசுந்தரி.

"தேடிவந்தேனே வள்ளி" என்ற மெட்டு.

38. காதலனான என் கண்ணாளா—நமஸ்
காரம் கனவானே குணாளா (காத)
மாது தீது செய்தவளாயினும்
ஏது நீரும் இனியதை மறந்திடும்கதி (காத)
மாரவய்யார தீரா மன்னு சென்னை ப்ரதாபா
மாசிலாத ரஞ்சித மோகனா
ராஜசீல ஸரஸ மனோகர இனி (காத)

மங்களம்! மங்களம்!! மங்களம்!!!



கோயமுத்தூர் கூட்டுறவு அச்சுக்கூடம், லிமிடெட்.





எதிரில்லா நடிகர்கள்! கண்கொள்ளாக் காக்ஷிகள்!

மாயவரம் ரஞ்சித மோகன கவி பாகவத
ஸ்ரீலஸ்ரீ K. தியாகராஜ தேசிகரால் இயற்றப்பட்ட
60 கர்ணாமிர்த கீதங்கள்!

கேட்கக் கேட்கத் தெவிட்டாது! பார்க்கப் பார்க்க ஆனந்தம்!






## பாமா விஜயத்தில் சில முக்கிய சீன்கள்.

பிரபுடீக நாகாகான் ஆக்ட்—பூரிஜகந்நாத் கோவில்-பூஜா சீன்—பூச்சூட்டும் சீன்—இடைச்சி சீன்—சக்களத்திப் போராட்டம்—நாரதர் கலகம்.

